# மஹாத்மா ஸ்ரீ நீலகண்ட சிவன்

## சரித்திரச் சுருக்கம்



நீலகண்ட சிவன் (1839-1900)

வெளியீட்டாளர் :

'சங்கீத கலைவாணி', 'தமிழிசைக் குயில்',
'நாதக்கனல்'

**திருமதி பி.எல். சரஸ்வதி ராம், பி.ஏ.**

(நீலகண்ட சிவன் அவர்களது கொள்ளுப் பேத்தி)

61 (28) போயஸ் தோட்டம், சென்னை - 600 086

தொலைபேசி : 4992856/4992866/4971313/4971314
Fax : 4971312

ரூ. 10/-

# குரு துதி

*(இயற்றியவர்:- பி.எல். சரஸ்வதிராம்).*

கானடா பல்லவி திஸ்ரம் ஆதி
நீலகண்ட குரு பரனை நினைவில்
வைப்போம் நாம் (ஸதா) (நீல)

## அனுபல்லவி

ஆலமுண்டு அகிலம் காத்த
நீல கண்டன் அருள் பெற்ற -
சைவத்தைநிலைநாட்டிய தெய்வசிகாமணி (நீல)

## சரணம்

முத்துக்குமாரன் திரு அருளினாலே
பெத்த குமாரன் ஸ்ரீ சுப்பிரமணியன்
ஸத்தியம் தவறாத சிவதத்துவ ஞானி
தித்திக்கும் தமிழ் மொழியில்
பத்திப்பாடல்கள் இசைத்த (நீல)

ஓம்

# ஸ்ரீ நீலகண்ட குருவே துணை

**28-7-2000 - மாலை 5.30**

❶ ஒரு தரமெவரானாலும் ஹம்ஸத்வனி - மஹாகணபதி அஷ்டகம்

❷ பக்தி புரிவரே (சிவ) ப்ரதமபதம்.

இந்த ப்ரதம பதத்தினால் மஹாத்மா நீலகண்ட சிவன் அவர்கள் நாமெல்லோருக்கும் தெரிவிப்பது என்னவென்றால் சிவபக்தி செய்தால் எளிதான, முறையில் இகபரஸௌ பாக்கியங்கள் அனைத்தையும் அடையலாமென்றார். எல்லாம் வல்ல இறைவன் சிவபெருமான் தனிப் பெருங்கருணையினாலே இன்று மஹாத்மா நீலகண்டசிவன் (தாஸர்) சரித்திர வரலாற்றினை என் முன்னோர்கள் ஆசீர்வாதத்தினால் எனக்கு தெரிந்தவரை சொல்லலாமென்று முன்வந்துள்ளேன்.

இவ்வாண்டு தாஸரின் ஸமாதி ஆராதனை நூறாண்டு பூர்த்தியாகிறது. 1839 முதல் ஆயிரத்துத்தொள்ளாயிரம் வரை சிவபெருமான் ஸ்ரீ நீலகண்டேஸ்வரர், ஆனந்தவல்லி அருளுக்குப் பாத்திரமான அவதாரபுருஷர் ஸ்ரீ நீலகண்டசிவன் அவர்கள், எனது தாயார் லட்சுமி அம்மாள் அவர்களின் தந்தையார் சுப்ரமணிய சிவன் (பொன்னுசிவன்) நீல கண்டசிவன் அவர்களின் மூத்த குமாரர்.

பூமியில் நூறாண்டுக்கொருமுறை சைவத்தை நிலை நாட்ட, சைவ சமயாச்சாரிகள் அவதாரம் ஏற்படும் என்பது புராண சம்மதம். இது எல்லோரும் அறிந்த விஷயம் சைவத்தை நிலைநாட்ட வந்த அவதார புருஷர் மஹாத்மா நீலகண்டசிவன், கவிகளுள், சந்தக்கவி, வரகவி, ஆசுகவி, அருள் கவி இவை அனைத்தும் ஒருங்கே உள்ள அருள் கவி. ஒரு கீர்த்தனத்தில்



கலைமகளை “வாவா கலை மாதே என்றழைத்து தமிழ் வாணியைத்துதித்து, பாடல்கள் எப்படி அமையவேணு மென்பதை விளக்கியுள்ளார்” இராகதான சேர்வையோடு நற்பதராசி வாரி ராசி மாலையியாப்பனவே, குதித்த ப்ராஸமோடு சொற்பொருள் - மேவிசையெதுகை மோனையும் பாகையொத்தயோக முற்றநவரஸ பாவிலக்கியலக்கணப் பொருத்தமும், ஆகமுத்து கோர்வையியென்னவரகவி, யானதென்றன் நாவில் வந்து தோன்றிட - வாவா கலைமாதே.

1839 வருடம் நாகர் கோவிலுக்கு வெகு அருகாமையிலுள்ள வடிவீசுவரம் கிராமத்திலே அழகம்மை, ஈசுவரன் அருளால், வைத்தீசுவரன் கோவில் குலதெய்வம் முத்து குமாரஸாமியின் அருளால் குமாரபுரம் முருகன் அருளால் பல வருடங்கள் குழந்தைபேறில்லாத தாய் தந்தையருக்கு புத்ரபாக்யம் ஏற்பட்டது. குழந்தை கடவுள் அருள் பெற்று பிறந்ததால் சுப்ரமண்யம் என்று பேரிட்டு வளர்த்தினார்கள். நாளடைவில் சுப்ரமண்யம் பெயர் மறைந்து, மறந்து நீலகண்டேசுவரரின் ஆனந்தவல்லியின் அருள் பெற்றதால் நீலகண்ட சிவன் (தாஸர்) என்ற பெயர் நிலைத்து நின்றது.

நீலகண்ட தாஸர் பிறந்த ஊரை அவரேபாடிய சிலவரிகள் பாடுகிறேன்

*அடாணா விருத்தம்*

❸ 1. பொடி பூசி அங்கமிசை
பொங்கர வணிந்தோன்
துடி மான் மழுப்படையன்
தூய மதிச் சூடன்
அடியீறு தேடிஅரி அயனு (அ) மறியாதான்
வடிவோடு மன்னுமிடம் வடிவீச்சு ரமே

2. ஆதியோடு அந்தமிலி அன்பர்தம் பெருமான்
காதிலணி குழையுளான் கண்கள் மூன்றுள்ளான்

ஓதிநான் மறைபுகழுமொருவனுயர் வரியன்
மாதினோடு மன்னுமிடம் வடிவீசுவரமே
அழகம்மை மாதினோடு மன்னுமிடம் வடிவீசுவரமே

தாய் தந்தையருடன் வடிவீசுவரத்தைவிட்டு பத்மனாபபுரம் வந்தார். அங்கே கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீநீலகண்டேசுவரர், ஆனந்தவல்லி தாயாரை சிறுவயதிலிருந்தே தரிசித்து காதலாகி, கசிந்து, கண்ணீர் மல்கி ஆழ்ந்த பக்தியுடன் வழிபட்டார். 5 வயதில் பள்ளிக்கூடம் சென்றார் ஆனால் படிப்பில், பிடிப்பின்றி சிவ பஜனை செய்வது, தாயார் சொல்லிகொடுத்த முத்து தாண்டாவர் அருணாசலகவிகள் பாட்டுகள் பாடி துதித்து, சிவன் கோவில்கள் போய் தரிசிப்பது, மற்ற பிள்ளைகளுக்கும் சொல்லிக்கொடுத்து காலத்தை சிவகைங்காரியங்கள் செய்வதிலேயே கழித்தார்.

தாய் தந்தையர் திருமணம் செய்யவேணுமென்று ஆசைப்பட்டார்கள். இதை அறிந்த தாஸர் சுசீந்திரம் தாணு மாலயன் கோவிலுக்கு சொல்லிக்காமல் போனார். அங்கே ஒரு அதிசயம் நிகழ்ந்தது. தாணு நாதர் குழம்பிய மனமுள்ள தாஸரை தேற்றி ஆறுதல் சொல்ல, ஆகாயத்தில் அசரீரியாக வாக்களித்தார் "இல்லறமே நல்லறம்" அபாவேனவிரக்தி கூடாது இல்லறத்திலிருந்தே சிவ பக்திசெய் என்று பணித்தார். பத்மனாபபுரம் திரும்பிவந்து தாய் தந்தையர் பேச்சுக்கு கட்டுப்பட்டு "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற அறிவுரையை நினைத்து மணம் செய்து கொள்ள ஒப்புக் கொண்டார்.

அந்த கரமனை கிரதமத்திலே தாணுஅய்யர்மிக்க செல்வந்தர். அவரது மகள் செவ்வாய் தோஷம் உள்ள லெக்ஷ்மியை யாரும் திருமணம் செய்து கொள்ள முன்வரவில்லை. (நீல கண்டதாஸர்)



சுப்ரமண்யத்துக்கும் லெக்ஷ்மிக்கும் திருமணம் நிகழ்ந்தது. ஆனால் தாஸரோ இல்லறத்தில் பற்றற்றவராகவே இருந்தார்.

18-வது வயதில் தாஸர் யாரிடமும் கூறாமல் வீட்டைவிட்டு வெளியேறினார். பத்மனாபபுரம் ஆலயத்திற்குச் சென்று வாகனப்பிரையில் ஒளிந்து கொண்டார். இரவு பகல் மூன்று நாட்கள் அன்னம் ஆகாரம் தண்ணீரின்றி, உண்ணாவிரதம் மேற்கொண்டு ஈச்வரனாகிய நீலகண்டேச்வரரையும் ஆனந்தவல்லியேயும் தரிசனம் செய்ய வேண்டுமென்று வைராக்ய பக்தியோடுத் தியானத்திலிருந்தார். இதை அறிந்த ஆனந்த வல்லித்தாயார் நீலகண்டேசுவரருடன் தாஸருக்கு தரிசனம் கொடுத்து பாலும், பழமும் அருந்தக்கொடுத்து, தாம்பூலமும் கொடுத்தருளினாள். திரு அருள் பெற்றவுடன் தமிழில் பாட ஆரம்பித்தார். திருவருள் பெற்றவுடன் பாடிய முதற்பாட்டு சன்னிதியிலேயே நின்று ஒரு புது தேஜஸீடன் திருநீலகண்ட தசகம் அருளினார். பத்துவரிகள் கொண்ட பத்து பதிகங்கள் கொண்ட தமிழ் மொழிப் பொக்கிஷம் தான் திருநீலகண்ட தசகம்.

**விருத்தம் சிவரஞ்சனி**

4 பண்டென்ன பூசையான் செய்த பயனோவலது பரமநின் கருணையில்போ, பாவியெனை ஆட்கொள்ள வேண்டுமென, என் மனப்பரிமீது தாவி நெஞ்சங் கொண்ட அஞ்ஞானவன் கண்டகக் கானிடை கொடுந்தொழில் புரிந்து மேவுங்கோப லோ பாதியாங் கொடிய மிருகாதியைக் குறைவற்றகண்ட ஞானச் சண்டகோதண்டக் குணத்தொவனிசெய் தோட்டியுஞ் சைவ விருதைக் காட்டியும் சடதிமிரமோடுற்ற காடெல்லாம் நீக்கி, உந்தன் பெருவழி தொலக்கி, அண்டர் தொழும் பாத என்னிதயங்கோடி மீதமைய வைத்தங்குலாத்தி அருள் வீலைபுரி நீல கண்டவுன் போற்றதமை அடைந்தோர்கள் கண்டிலேனே.

## ஹிந்தோளம் (கண்டநம)

❺ சாமி நீ கண்டு நின்வாமையாம் என் பெற்ற
தாய் கண்டு மனமிரங்கி
தமிழ் வாணியுதவி அதனாற்பாடி அருளுறத்
தந்து மேன்மேலும் மன் பாய்க்
கோமளத்தாமரைப் பூமலர் பதகதி
கொடுத்தாள் என்னுள்ளத்தே
குடி கொண்ட திருநீல கண்டாவுன்போல்
கருணை கொண்டோர்கள் கண்டிலேனே
ஆனந்த வல்லி தரிசனம் கிடைத்தவுடனேயே
ஆனந்த வல்லி தசகம் பாடினார்

1. "தீபமும் ஜோதியும் போல்"
2. ஐந்து மோராறு மீரைந்து மீராறு
மோரைந்து மோர்பத்துமான
ஐ மூன்று மோரொன்றும் அட்சரமகா
மந்த்ரம் அருள் வடிவமான தாயே
ஐந்து கரனோடு ஈராறுகரனையுமின்ற
அம்பிகே இன்ப நிதியே
அகிலாண்ட கோடி புகழ் மகராசியான
பரமானந்த வல்லி உமையே-

தாஸர் பாடிய முதல் கீர்த்தனை
அமீர் கல்யாணி ராகத்திலமைந்த
சிவனை நினை மனமே, ஸாம்பஸதா - (சிவனை)
பவவினை அகன்று போம்படிக்குபை
தந்தாளும் பரனை பரமதயாகரனை
உமாவரனை - (சிவனை)

எல்லோரும் அடிபணிந்து தாஸரை மறுபடியும் கரமனைநகர் வந்து இல்லறத்தில் வற்புறுத்தி இருக்க வைத்தார்கள். மாமனார் தாணு அய்யா தாஸரை வேலையிலே அமர்த்தி, மஜிஸ்ட்ரேட்



உத்யோகம் நிலைத்தது. ஆனால் சத்யமும், நேர்மையும், கடமையும், கண்ணியமும் தவறாத தாஸர் ஒரு பொய் சாட்சி சொல்லத் தூண்டப்பட்டு, லஞ்சம் கொடுத்துக் கெடுக்கும்பேர்வழிகளிடமிருந்து தப்புவதற்காக அந்த வேலையை வேண்டாமென்று ஒதுக்கி ராஜினாமாசெய்து விட்டார். ஒரு குடும்பத்தில் அன்னை தந்தை அவர்கள் பெற்ற மக்களிடம் அன்னியோன்யமில்லாத அநியாய நிலைமையைக் கண்டு மனங்கலங்கினார். முகாரி ராகத்திலே அமைந்த இந்தபாட்டைகேளுங்கள், நாமெல்லோரும் அறிந்து கொள்ள, புரிந்து வருங்காலத்தை தெரிந்து கொள்ள அவர் பட்டபாட்டை இந்தப் பாட்டிலே பாட்டாக பாடி வருந்தியுள்ளார். விளக்கியுள்ளார்.

❻ "என்ன விதம் பிழைப் போம் எளியோரே"

சரணம் : கால மழைகளில் லாதாச்சே அது
காலம் தவறிப் பெய்யலாச்சே - பஞ்சக்
காலம் எப்போதும் நிலையாச்சே - பொல்லாக்
காலமிதென்று சத்திய பாலமிடியலாச்சே

பல சரணங்கள் உள்ள இந்தக் கீர்த்தனை தாஸர் வருங்காலத்தை முன்பே அறிந்து வருந்தும் ஒரு தீர்க்க தரிசி என்பதை நிரூபிக்கிறது.

அடுத்ததாக தாஸரின் அருமை பெருமைகளை சற்று ஆராய்வோம்.

திருநாவுக்கரசர் "தலையே நீ வணங்காய்"

என்ற தேவாரத்தை எல்லோரும் கேட்டிருக்கலாம். அதே போல் நீ தாஸர் அங்காதி மாலை அருளியுள்ளார்.

யமன்

7 சிரமே நீ பணிவாய் மகாதேவன் திருவடி மூவகைமுறையாய்
கரமே நீ தொழுவாய் - நாகங்கக்கும் கறையுண்டமுக்கட் கடவுளைத் (2) கானடா
தானே வலம் வருவாய் - சிவ சங்கரன் தங்கும் மாலிங் கன்
திருக்கோயில்தேளே இருசெவியே - தொண்டர்
கேத மற மாது தாதுரைத்தார் கதை
தேஸ்
கண்ணே சென்று காணே - உள்ளங்
கனிந்து மாமதி (ய)அணிந்தவன் கோலம்
உண்ணே உகந்து நாவே - (உ)யுமை
யொரு பாகனருட், திருநாமாமுதம்
நளின காந்தி
மனமே நீ நினைப்பாய் - தில்லை
மன்றுள்ளாடும் கைலைக் குன்றுடையான் பாதஞ் (ம்)
சினமே நீ யொழிவாய் சாந்த தேசிகனை
சிந்துபைரவி
சிவ பூசனை புரியக் கதியென்றிரு சித்தமே
வேதகானம் பெறும் பெருமானைச் சிவனை
மதியே நீ மதியாய் - என்னை மாணிக்கமா
யீசர் காணிக்கை கொடுக்க
ப்ருந்தாவன சாரங்கா.
புலன் காளினி(ர்) அடங்கீர் ஐம் - பரி
பூரணனைவைக்கும் காரணன்காட்சிக்குக்
கலங்காதிரு நெஞ்சமே - ஸ்ரீ கண்டன்
திரு நீலகண்டனருள் நாடிக்
கலங்காதிரு நெஞ்சமே - (3)

நீலகண்ட என்ற முத்திரை பதித்த ஆயிரக் கணக்கான பாட்டுகளுடன், ஒரே அர்த்த முள்ள பல முத்திரைகள் பதித்து



பாடிய பாட்டுகள் அநேகம், மைக்கண்டர், கறைக்கண்டர், மைமணிகண்டர், மைமணி கந்தரன், மை மணிகண்டத்தான், நீல மணி கண்டன், நீல மணிகந்தரன் கருமணி கந்தரன், கருமணி கண்டன் என்று பல முத்திரைகள் பதித்துப் பாடியுள்ளார். உதாரணமாக ஒரு கீர்த்தனை ஸரஸ்வதி ஆதி.

8 ப. சக்திஸரஸ்வதியே சாம்பவி ரணவீர
பத்ரகாளி பராபரையே - பாவனியே
அ.ப. நித்யநிராமயியே நின்பணிசெய் எளியேன்
அத்தல் தடுத்தருளே - ஆரணி பூரணியே
ச. அண்டமனைத்தையு மீன்று
ஆண்டருளும் பரையே
தொண்டன் உனக்கு எளியேன்
துன்பமெல்லாம் தீர்ப்பாய்
பண்டமரர்க்கு அருளி
பாற் கடல் ஆலாலம்
கண்டமிருத்திய மைக்
கண்டர் மனத்தமுதே - (சக்தி)

ஸ்ரீ ராமலிங்க அடிகளார் "அருட்பெருஞ் ஜோதி தனிப்பெருங்கருணை என்று முழங்கால் துணி உடுத்தி சைவ முழக்கம் செய்த பெரியவர் "அருமருந்தொரு தனிமருந்து அம்பலத்தில் கண்டேனே" நல்லமருந்து இம்மருந்து பிறவிப் பிணியைப் போக்க வல்ல வைத்யநாத மருந்து" என்றார். அதே போல் நீ தாஸர் பாடினார் ப்யாக் ராகத்திலே மருந்திருக்குது (2) மனம் அன்புற்றவர்க்கே.

9 அ.ப. மருந்து மற்றெதுவும் மிதுக் கொப்பாகாது
மமை கொண்டல் போதும் ஜனனம் வராது

ச. பக்தியுள்ளார்க்குண்ணப்பலிக்கும் மருந்து
பகரவிலையில்லை
பரவெளிதன்னில் முளைத்துச் சிவமாய்த்தழைத்த
தனிமருந்து, நித்தியமாகுமழிவில்லா மருந்து
நீலகண்ட நாமம் பெற்ற மெய் மருந்து (மருந்)
நித்யமான இப்பேர்பட்ட மருந்தை உட்கொண்டால்
என்னென்ன வியாதிகளெல்லாம் தீரும்-

⑩ ஆதிகளும் பல வ்யாதிகளும் -துன்
பாதிகளும் விண்டோடிடுமாம்
வாதைகளும் மன வேதைகளும், பொய்
வஞ்சனை சூன்யமும் மாறிடுமாம்
வாதுகள் சூதுகள் வல்வினை யாவும்
வாராவண்ணம் போய் விடுமாம்
சோதியிளம் பிறை சூடிய பரனைத்
துதி செய்தடி தொழும் அடியார்க்கே (2)
பணிந்தார் பிறவி நோய் தணிந்தேபோம்
பின்னே பரம சுகமாம் சொன்னேன்.

ஸ்ரீத்யாகப்ரம்மம் ஸங்கீத மும்மூர்த்திகளில் ஒருவர் பலகீர்த்தனைகளை தெலுங்கு மொழியிலே பாடி ராம பக்தி ஸாம்ராஜ்ய மென்று ஒரு ஸங்கீத சாம்ராஜ்யத்தையே உருவாக்கி "ஸங்கீத ஞானமு பக்திவினா ஸன்மார்கமுகலதே ஓமனஸா" என்று பாடினார். அதேபோல் நமது தமிழ் தியாகராஜர் நீலகண்ட சிவன் ஸங்கீத ஞானாமுதத்தில், பக்தி எனும் தேனைக்கலந்து அமுதம்(3) பரமானந்தமான சிவானந்த அமுதம், இசை உண்ண உண்ண தெவிட்டாத பேரானந்தமான இசை அமுதமென்றார் இன்னும் சிவனாமம் வெகுக்ஷேமம் ஜபதபங்களிலும் உத்தமோத்தமம் என்றார். சிவன் வருவார் துணை அவர் தருவார் கதிதேறிக்கோநீ மனமே, பஜனை செய்வாய் மனமே ஸதாசிவ



பஜனை செய்வாய் மனமே, ஆதிசிவனருள் யாருக் கிருக்குதோ அவரே பெரியவரே - யாரானாலென்ன அன்புள்ள பேர்களே சீரான பந்துக்களே "சங்கரனை தினம் துதிமனமே அவர்தான் உனக்கிக பர தனமே" காம்போதி ராகத்தில் சிவனை நினைந்து ஸ்துதி பாடிக்கொள் மனமே ஜீவன் மோட்சம் வருமே இந்தப் பாட்டிலே சரணம் ஆலயம் எல்லாம் தேடி ஓடவும் வேண்டாம், அலைக்கடல் முதல் தீர்த்த மாடவும் வேண்டாம் என்று பாடிய தாஸர் தமிழ் மூதாட்டி ஔவைபிராட்டியார் சொன்ன "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்", "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்ற பொன் மொழிகளை மறக்காமல், மறுக்காமல் அதைப் பின் பற்றி அவரே சிலாகித்துப்பாடியுள்ளார்.

மோஹனம் ஆதி.

⑪ 1. மங்கல வேதம்பாடி மணவா ஊரும்
மறை சொன்ன வழி தேடி நடவா ஊரும்
2. சங்கரனாற் கன்புடையாரிருக்கா ஊரும்
தழலூட்டித்தாமுண்பர் தரியா ஊரும்
3. பங்கமறத் திருநீறு தீண்டா ஊரும்
பரகதிக்குப் பரசிவனை அண்டா ஊரும்
4. நங்கை உமாபதி கோயிலில்லா ஊரும்
நாடல்லா அது வெல்லாங் கொடியகாடே
எல்லாரும் சிவனடியார் - நா
மெல்லாரும் ஒரு குடியார் (3)

108 க்ஷேத்ரதரிசனம் பல சீடர்களுடன் செய்தார் அந்த அந்த ஊரிலே பலசித்திகள் செய்து பல அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டி அனைவரையும் ஆச்சரியத்திலாழ்த்தி மகிழ்வித்தார்.

உதாரணமாக சில நிகழ்ச்சிகள் எனது பாட்டி சொன்ன கதைகளை சிறுவயதில் கேட்டதைச்சொல்லுகிறேன். ஸ்ரீத்யாகராசர் ஸ்ரீராமர்தரிசனம் செய்து "பாலகனகமய சேல ஸிஜனபரிபால" என்று பாடியது போல் தாஸர் கதிர்காமம் போய் முருகனை தரிசனம் செய்ய கப்பலில் ஏறிச்செல்ல ஏற்பாடுகள் செய்தார்கள் ஆனால் கதிர்காமக் கந்தன் தாஸருக்கு முன்பு ஜோதி ஸ்வரூபமாய். தரிசனம் கொடுத்தார். உடனே தாஸர் மனமுருகி, கண்ணீர் பெருகமுகாரி ராகத்திலே பாடினார் - கண்ணாறக் கண்டேனிருகண்ணாறு பெருக, செங்கண்ணன் மருகனை முக்கண்ணன் திருமகனை - கண்ணாறக்கண்டேனே "தாஸருக்கு மிகவும் பிடித்த ஊர்வைக்கம் "வைக்கத்தப்பர்" வைக்கத்தப்பர்மீது பல பாட்டுகள் கண்ணிகள் இயற்றியுள்ளார்". (கருணைப்பெருங்கடலே - சுத்ததன்யாகி) வைக்கத்திற்கு வெகு அருகாமையிலுள்ள ஏற்றுமானூரகோவிலுக்கு தாஸர் போகவில்லை பாடவுமில்லை, உடனே ஏற்று மானூர் இறைவன் ஒருகுட்டி யானையை ஏவிவிட்டார் தாஸரையும் சீடர்களையும் விரட்டி ஓட்டி கோவிலுக்குள்ளே விட்டு விட்டு மறைந்தது. உடனே தாஸர் பாடினார்.

விருத்தம் ஹம்ஸானந்தி "ஒட்டிலாதுனைவிட்டடியேன் போமாறுன்னினேன் என்ப தெண்ணி எனை ஒரு குட்டி யானையை விட்டுணர் வீந்திட்ட, கோலங்கண்டு வந்துன்னடி கும்பிட்டேன். அட்டிசொல்லா தருள் புரிவாயினி அப்பனே, முப்புரம் தழலிட்ட நாள், இஷ்டமாய் கிட்டி வந்ததோர் மால்விடை யேற்றவா ஏற்றுமானூர் இறைவனே" அடுத்ததாக மழை வருவித்த சம்பவம் கருங்குளம் எனும் கிராமம் 5 வருடங்களாக மழையேயில்லாமல் பஞ்சம் நீடித்து ஜனங்கள் தவித்தார்கள். தாஸரை அணுகினார்கள், கருங்குளம் அழைத்துச் சென்று காலடியில் விழுந்து யாசித்தார்கள். உடனே தாஸர் அந்த



ஊரில் கோவில் கொண்டிருக்கும் மார்த்தாண்டேசுவரர், அன்னைக்குல சேகரியிடம் முறையிட்டு மழைவருவதற்காக மன்றாடி மனமுருகிப்பாடினார். முத்துஸ்வாமி தீட்சதர் ஆனந்தாம்ருத கர்ஷணி அம்ருதவர்ஷணி ராகத்திலே பாடி மழை வருவித்ததைப் போல் தாஸர் பாடினார். அமிர்தவர்ஷணி விருத்தம். "பிழைகளெல்லாம் நீ பொறுப்பாய் பெற்றவளே, பிள்ளைகள்குன் கழ லிணையேதுணையலதோர் கதிகாணோம் கண்டறிவாய் மழையென வந்தருள் தருவாய் (2) மாதேவன், மாதேவி அழகுனக் கீதாகு மன்றோ

அன்னை குல சேகரியே,<br>
மார்த்தாண்டேசுவரர் குல சேகரியே<br>
மார்த்தாண்டேசுவரர் அகிலாண்டேசுவரியே<br>
அன்னை குலசேகரியே மழைதருவாயே"

என்று பலவாறு பாடித்துதித்து வேண்டினார் பக்திவெள்ளத்தில் நீந்தினார் உடனே கடகடகட வென்று இடிமுழக்கத்துடன் கூடிய பலத்த மழை பல நாட்கள் பெய்து அந்த ஊரே குளிர்ந்தது பயிர் செழித்தது, ஆறு, கிணறுகள் நிரம்பின பஞ்சம் விலகியது.

அடுத்ததாக தாஸர் திருடர்களை நல்லவர்களாக மாற்றிய சம்பவம்.

ஒரு சமயம் பல சங்கீத உபன்யாசங்கள் செய்துவிட்டு இரவில் காட்டு வழியில் சென்று கொண்டிருக்கும் போது திருடர்களால் சூழப்பட்டு, திருடர்கள் பணமுடிச்சை திருடிக்கொண்டு போகும் போது தாஸர் திருடர்களை அன்புடன் அழைத்து பணம் மட்டிலும் போதாது தம்பூரா மிருதங்கம் மற்ற வாத்தியங்கள் எல்லாம் நல்ல விலை கிடைக்குமே அதையும் எடுத்துக் கொண்டு போகலாமே என்றார். திருடர்கள் உடனே எல்லாவாதியங்களையும் எடுத்துக் கொண்டு ஓடநினைத்தார்கள்

உடனே அவர்கள் கால் கைகள் வீங்கி ஓடவும் தூக்கவும் முடியாமல் தவித்து வலியால் திண்டாடி திரும்பி வந்து தாஸரின் காலடியிலே விழுந்து மன்னிப்புக்கேட்டார்கள். திருடர்கள் திருந்தி எடுத்ததை திருப்பிக் கொடுத்து நல்ல வழியில் உழைத்து சம்பாதித்து வாழமுடிவு செய்தார்கள்.

ஶ்ரீத்யாக ராசர் நாஜீவதாரா என்ற பிலஹரி ராகப் பாட்டு பாடி இறந்தவரை பிழைப்பித்ததைப் போல் நீலகண்ட தாஸர் ஒரு ஊரில் விதவைத்தாய் தன் ஒரே மகன் காலரா நோயினால் இறந்ததைச் சொல்லி தாஸரிடம் உயிர் பிச்சை அளித்து காப்பாற்ற வேண்டினாள். தாஸர் கருணையோடு விபூதி பூசி பாலகனுக்கு பஞ்சாக்ஷர மந்த்ரம் ஓதி, பஞ்சாக்ஷர மந்திர மகிமையால் இறந்தபையனை உயிர்ப்பித்து தாயின் சோகத்தை போக்கினார். ஶ்ரீத்யாகராசரின் அண்ணாஜல் பேசன் தியாகராசர் வணங்கி வழிபடும் ராமஸீதா விக்ரஹங்களை காவேரி ஆற்றில் தூக்கி எறிந்துவிட்டார், சோகம் நிறைந்த பாட்டுகள் இயற்றினார், பிறகு விக்ரஹம் கிடைத்தவுடன் "கனுகொண்டினி ஶ்ரீ ராமுனிநேடு" என்று பாடினார். தாஸரின் மாமனார் தாணு அய்யர் தாஸர் எழுதிவைத்த நூற்றுக் கணக்கான கீர்த்தனைகளை தெருவில் வீசி எறிந்தார். வீட்டிலே எண்ணையே இல்லாமல் செய்து இருளில் தாஸரை தவிக்கவைத்தார். தாஸர் வலிதாமலன்மியம் எழுதும் ஸமயம். அருகில் இருந்த சொம்பிலிருந்த நீரை விளக்கில் ஊற்றி விளக்கை எரிய வைத்து எழுதி முடித்தார். இன்னொருசமயம் பத்மனாபபுரம் கோயில் உத்ஸவத்தில் தீவட்டிகளில் எண்ணை இல்லாமல் போகவே அருகிலுள்ள குளத்து நீரை தாராளமாக எல்லா தீவட்டிகளிலும் ஊற்றி பிரகாசமாக எரிய வைத்தார் இதைக்கண்டவர்கள் ஆச்சரிய மடைந்து தாஸரைப் புகழ்த்தி வணங்கினார்கள் கோவில் உத்ஸவத்தின் போது கன மழை வந்து ஈச்வரன் புறப்படும்



வீதிவுலாவைக்கெடுக்கவே, தாஸர் ஓடி வந்து எதிர்த்து "எதிர்படும் வருண அஞ்ச" என்று பதிகம் பாடி மழையை நிறுத்தினார்.

எந்தரோ மஹானு பாவுலு அந்தரிகி வந்தன முலு என்று தியாகராசர் பாடினார் நமது தாஸரோ - (எதிகுலகாம் போத)

⓬ ப: பெரியோர் பதம் பணிந்தாலெதுவும்
பெறுமே, வருமே நலமே காண்
அ.ப. பரமாய் கதியென்றறிவாய் நாளும்
பாடிக் கூடிவுண்ணாடியே வாழும்
ச. பரமசிவனைக் கொண்டாடிக் கொண்டிருப்பார்
பணிந்தவர் நினைந்திடும் வரங்களை கொடுப்பார்
திரு நீலகண்டர்தம தருள் கொள்ளையடிப்பார்
சின்மயமாகிநின்று, உண்மை இங்குரைப்பார்.

ஒரு கிராமத்தில் தாஸரின் சீடர்களை ஒருவன் அவனது வாசற்திண்ணையில் உறங்க விடாமல் விரட்டி அடித்தான். இதை அறிந்த தாஸர் சீடர்களிடம் "நாளை எண்ணை தேய்த்துக்குளித்து இறக்கப் போகும் இவன் திண்ணையை கொடுத்து உதவ மறுக்கிறானே என்று வருந்தினார். அதுபோல் அடுத்தநாள் ஆற்றில் எண்ணை தேய்த்து குளித்த அவன் சுழலிலே அகப்பட்டு இறந்தான். தாஸரின் புகழைக் கேட்ட திருவனந்தபுரம் மூலம் திருநாள் மகாராஜா அழைப்பு விடுத்து, பாட்டுகள் பாடச் சொன்னார். ஸங்கீத உபன் யாசத்தின் நடுவே தாஸர் "அரசனிடத்தில் நமக்கென்னே அவராலாவதும் மற்றேன்னே" - "முடி சூடும் மன்னனும் முடிவில் ஒரு பிடி சாம்பலே ஆவர்" என்று பயமில்லாமல் பாடவே, கூடிவுள்ளவர்கள் பயந்தார்கள் ஆனால் மூலம் திருநாள் மகாராசா ஸந்தோஷம் அடைந்து தாஸர் "ஸத்யம் பறஞ்ஞுதே எனிக்கே வளரே இஷ்டமாயி, ஸந்தோஷமாயி" என்று தாஸரைசிலாகித்து

வெள்ளித் தட்டிலே பொற்காசுகளையும், தங்கத் தோடாவும் பரிசு கொடுத்தார். வாசக் காப்போன் மனதிலே நினைத்ததை, அறிந்த தாஸர் அந்தப் பணத்தை அவனிடமே கொடுத்துவிட்டார். மஹாத்மா நீ தாஸர் மற்ற கவிகள், வாக்கோயக்காரர்கள் போல் அல்லாமல் முற்றிலும் மாறுபட்டவர் - தமிழ் மொழியில் உள்ள அனைத்து பாடல் வகைகளையும் இயற்றிப்பாடியுள்ளார். உதாரணமாக கீர்த்தனைகள் தமிழ், ஸம்ஸ்க்ருதம், ஸம்ஸ்கிருதம் கலந்த தமிழ், மணிப்ரவாளம் கண்ணிகள், விருத்தங்கள், சந்தவிருத்தம், ஆர்ய விருத்தம், சந்தம், சிந்து, சிந்து வகைகளில் ஆனந்தச்சிந்து, மொண்டிச்சிந்து, காவடிச்சிந்து, வழிநடை சிந்து ஆச்சாரியா, கொச்சகம், பஞ்சகம், ஷட்கம், அஷ்டகம், நவகம், தசகம், சதகம் (நான்குவரிகள் கொண்ட நூறு பத்திகள்) ஷடாக்ஷரி, அங்காதி மாலை, நவரத்ன மாலை, அக்ஷரமாலை (தமிழ் அக்ஷரங்கள் அனைத்துயும் கொண்டது) காணிக்கை, அன்னக் கண்ணி பாம்புக் கண்ணி, குறத்தி கண்ணி, மயிற் கண்ணி, குயில் கண்ணி, அந்தாதிகள் பல ஸ்ரீலளிதாதேவி மஹாத்மியம் - கல்யாணப் பாடல்கள் ஊஞ்சல், நலுங்கு, லாலி, கும்மி, கப்பல், தாலாட்டு, ஆனந்த களிப்பு, மகுடி, ஒப்பாரி, இராகமாலிகை, பஞ்ச இராக மாலிகை, நவராக மாலிகை அஷ்டாதசராகமாலிகை- பதினெட்டு இராகங்கள் கொண்ட ஒரு அற்புதப் படைப்பு. 63 நாயன்மார் சரித்திரங்கள் இதில் சில சரித்திரங்கள் களவு போய் விட்டன. 64 சிவ லீலைகள் நால்வர் சரித்திரம் சுந்தரர், திருஞானசம்பந்தர், மாணிக்க வாசகர், திருநாவுக்கரசர், ஸோமவார மஹாத்மியம், ப்ரதோஷ மஹாத்மியம், சிவராத்ரி மஹாத்மியம், ஸ்ரீருத்ர மஹிமை ருத்ராக்ஷ மஹாத்மியம். பஞ்சநடனகீர்த்தனைகள் முக்யமாக புனிதவதியார் எனும் காரைக்கால் அம்மையார் மாதர் குல மாணிக்கமாய்த் திகழ்ந்தவர். சிவனிடம் கைத்தாளம் பெற்று அவரது நடனத்திற்கே அருகில் அமர்ந்து தாளம் போட்ட புனித வதியார்,



திருவாலங்காடு க்ஷேத்ரத்திலே நடராஜ பெருமான் நடன மாடினதைக் கண்டு பரவசமானார்.

நடனமாடினான் - வஸந்தா - ரூபகம்

⓭ பஞ்ச நடன கீர்த்தனைகள் தவிர தேவிகீர்த்தனைகள் மஹாலஷ்மி ஸரஸ்வதி கீர்த்தனைகள், பண்ணி சைந்பதிகம், பண் அமைந்த பதிகம் பல, அந்தாதிகள் பல, ஸ்ரீ ராமச்சந்திராஷ்டகம், க்ருஷ்ணாஷ்டகம், பத்மனாபஸ்வாமி பேரில் தசாவதார ஸ்தோத்திரம் இன்றும் பல (அரியவோர்மகரமாய், தசாவதாரத்தை இவ்வளவு எளிமையான தமிழில் சுருக்கமாக யாரால்வர்ணித்து இயற்றமுடியும்? அடுத்தாக தசாவதாரம் பஞ்ச கௌளை ராகத்திலே முதலாவதாக மீனாவதாரம் கௌளை - ஆதி.

⓮ 1. எள்ளமர் எண்ணைபோலும்
எங்குமாயிருந்தர்யின்று
தள்ளவா எங்கள் துன்பம்
சது(ர்) மறை கவர்ந்தோன் ஆவி
கொள்ளவா கோவை தன்னைக்
கொடுக்கவா வென்று தேவர்
உள்ள வாறுரைக்க மீனாய்
உதித்தவன் ஸ்ரீ வைகுண்டன்

2. ரீதி கௌளை
தாரணி தாங்கிப் பூமி தன்னை யோர்
கொம்பிற்றர(தர)க்கி
நீரமர் ஆமை பன்றியாகி
நீள் புவனங் காக்கும்
காரணன் கரி சொற் கேட்டுக்
கருணையாய எதிர்ந்து நின்ற

நாரணன் கமலம் பூத்த
நாவியோன் ஸ்ரீ வைகுண்டன்

3. மாயாமாளவ கௌளை
அன்பர் தம் அல்லல் நோக்கி
அங்கிங்கு நிறைந்தோனென்ன
(ஸ்)தம்பநின்றுதித்த நாதன்
தாரணி அளந்த பாதன்
அன்பரை வதைக்கவந்த
மறையவன்/சென்னிநாறு
சம்புவுக்கிறை கொடுத்த
(ச)ஜய ராமன் ஸ்ரீ வைகுண்டன்

4. கன்னட கௌளை
புத்தளர வென்று பூமி புரந்தவன்
பூமிபார மெத்தையு மகற்றி
ஜவரிடத்துறவாடி நின்றோன்
இத்தறைக் கலரை யெல்லாம்
எமனுடற் பசிக்களித்தும்
பத்துருவெடுத் தரவு மேற்
படுப்பவன் ஸ்ரீ வைகுண்டன்

5. கேதாரகௌளை
அவனி உண்டு உதரத்துள்ளே
அகிலமும் காண்பிவித்தோன்
புவனமீரேழும் சுட்டுப்
பொடிசெய்யும் புனிதன்தன்பாற்
(த)றவமுறு நீல கண்டதாஸன் வாழ்த்திடவும் நோக்கி



**அவங்கவர்ந்தருளும் கள்ள பிரான்வன் ஸ்ரீ வைகுண்டன்**

நாமெல்லோரும் அறிந்து தெரிந்து தெளிந்து நடந்துகொள்ள ஒரு அரிய பெரிய அறிவுரை செய்துள்ளார். அது என்ன மிகவும் எளிமையான வழி ஒரே நீலாக்கிய மான வழி. நம் ஜன்மம் கடைத்தேறி முக்தி அடைவதற்கு "ஒருநாள் ஒரு பொழுதாகிலும்" இதே சுலபமான வழிஇகபரஸௌபாக்யங்கள் அடைவதற்கான வழி-ப்ரதம் பதத்தில் கூறிய வழி "சிவ பக்தி புரிவரே இகபரமும் பெறுவரே".

எல்லாம் வல்ல இறைவன் சிவபெருமான் எல்லா நல்ல விஷயங்களுக்கும் ஒரு முடிவு ஏற்படுத்தியுள்ளார். அது போல் 60 வயது பூர்த்தியானதும் நீ தாஸர் தனது அந்தி காலம் நெருங்கிய ஸமயத்தை முன்பே அறிந்திருந்தார். "ஸவச்சன்னமரணம்" என்பது "தான் நினைத்த நேரத்தில் சிவனுடன் ஒன்றறக்கலப்பது".

முன்னதாகவே எல்லோருக்கும் இந்த விஷயத்தை தெரிவித்தார். பக்தர்கள், பண்டிதர்கள், அரசர்கள் முதலியோர் கூடி புஷ்பபல்லக்கு அலங்கரித்தார்கள். ஆடிமாதம், க்ருஷ்ணபக்ஷம், த்வாதசி திதியன்று மாலை 4.30 மணிக்கு கபாலமோக்ஷமடைய நினைத்தார். 4 குமாரர்களையும் ஒரு மகளையும், மனைவியையும் அழைத்து யாரும் அழக்கூடாது என்று பணித்தார்.

மூன்று நாட்கள் இரவு, பகல் சிவ பஜனை கோஷம் விண்ணை எட்டியது பஜனையின் உச்சக்கட்டம் நெருங்கிற்று. நீ தாஸர் பாடினார்.

⓯ மத்யமாவதி விருத்தம்
*அருள் நீலகண்ட மது கண்ட நாள் முதலாய்*
*அனந்த முறைபாடிவுன்றன் அடிமையானேன்*

*திரு நீலகண்ட தாஸன் எனப்பெயர் சிறந்தேன்.*
*சேர்த்தாண்டதிருவருளிது என்னவும் உணர்ந்தேன்*
*பெருவால முண்ட திருவருள் உண்மை நாடி*
*பெரிய பொருள் வேறில்லை யென உனையடைந்தேன்*
*வருகால முண்டென இகழ்ந்திடாய் வந்தாள்*
*மகாதேவ (2) என்றுனை அழைத்தேன் (3)*

மூன்று முறை மகாதேவ வென்று அழைத்த வண்ணம் கபாலமோக்ஷம் அடைந்தார் சிவனுடன் ஒன்றறக்கலந்தார் சீடர்கள் புஷ்பப்பல்லக்கிலமர்த்தி ஊர்வலமாக எடுத்துச்சென்றார்கள்.

மஹாத்மா நீலகண்ட தாஸர் நீலகண்டேசுவரருடன் ஒன்றாகக் கலந்தார்.

நமப்பார்வதி பதயே - ஹரஹரமகாதேவா

**மத்யமாவதி** *ஆதி*

16 பரமசிவனுக்கு மங்களம்
ஸ்ரீ பார்வதி நாகனுக்குமங்களம்.

1. அருமறைகள் புகழும் ஆனந்தவடிவாகி
திருவருளால் திகழும் சிற்பரஞ்சோதியாகும்.
2. கந்தன் கணபதிக்கும் கருமாலயன் தேவர்க்கும்
சந்தநான்மறைகட்கும் தவமுனிநால்வருக்கும்.
3. எந்தவுலகும் பெற்ற இமயகிரிமாதிற்கும்
எந்தை யடி மறவா திருக்கும் நல்லடியார்க்கும்.
4. நீலகண்டர் சரிதம் காதுறக் கேட்பவர்க்கும்
ஆலமுண்டானை நினைந்து தெளிவுறும் (நல்லோருக்கும்)
எல்லோருக்கும்.



வைக்கத்தப்பர்

# மஹாத்மா ஸ்ரீநீலகண்ட சிவன்

அவர்கள் அருளிச் செய்த

# மகா கணபதி அஷ்டகம்



*வெளியீட்டாளர் :*

திருமதி. பி.எல். சரஸ்வதி ராம், B.A.,

# மஹாத்மா ஸ்ரீநீலகண்ட சிவன்

அவர்கள் அருளிச் செய்த

# மகா கணபதி அஷ்டகம்

## திருமயிலை பாடல்

*வெளியீட்டாளர் :*

**திருமதி. பி.எல். சரஸ்வதி ராம்,** B.A.,

திருவருட் சிறந்த முக்கட்சிவபரன் குமரனாகிப்
பெருமதம் பொழியும் வெள்ளைப் பெருங்களிறென விளங்குந்
திருமுகந் தழைந்து கௌரி திருமணங் களிக்கவும் வந்
தருமையாயெதிர்ந்து நிர்க்குமைங் கரத்தானே போற்றி (1)

வளமிகு பூசை முந்தி வாங்கிய வீங்கு தொந்தி
குளமவல் கனியருந்திக் கோதறு கருணை சிந்தி
புளகித ஞானதந்தி புகழ்மிகு வதனவந்தி
இளமதி வேணியெங்காளிறைவ நின்பாதம் போற்றி (2)

கயமுகாசுரன் றனனாவிகவர்ந்து மண்விண்ணுங் காத்த
கயவரானனந் திகழ்ந்த கணபதியமரர் போற்றும்
நயன மூன்றுடைய நாதா நாலுவாய் சிறந்த போதா
பயமறு துணைபுரிந்தாள் பரமனே போற்றி போற்றி (3)

ஒருதரமெவாரனாலுமுனது சன்னிதி முனன்பாய்
இருகரஞ்சிரமேற் குட்டியேற்றிடினரக்கமோடுந்
திருவருணோக்கஞ் செய்து சிந்திப்பதுடனே நல்கி
வருதுணையானவெங்கள் வரதனே போற்றி போற்றி (4)

சிரசடிபடுகிமுக்காற் சிதைந்திடு தேவர் கோனே
முரசடிபடுமுழங்கால் மூவுலகானவைத்திங்
காசடி குடியிருப்பாயடி தொழுவார்க்கிரங்குஞ்
சிரசடி நெடுகிநிற்போன் செல்வனே போற்றி போற்றி 5)

மதிப்பிலா வலியான் மிக்கமதமுளான்றலைபத்துள்ளான்
குதிப்பெலா மகல விண்ணோர் குளிர்மலர் சொரிந்து வாழ்த்தத்
துதிப்பெருங் கரத்திலேந்தித் துடியாட்டமாட்டவன்னோன்
துதிப்பினாலருள் புரிந்து துதிக்கரத்தானே போற்றி (6)

மண்குடத் துதித்த வேதமாமுனிக்குபதேசித்த
கண்களீறாறுபெற்றான் கைதொழவுடன் மகிழ்ந்து
கண்கலக்கிடையே கோட்டுக்கரியெனப் போய் வேலர்க்குப்
பெண்குறத்தியை யளித்த பெருமைனே போற்றி போற்றி (7)

அமலநின் கருணை போற்றியங்குச பாகம் போற்றி
இமையவர் முனிவரேத்து மிணையடிக் கமலம் போற்றி
விமலமெய்த்தவளம் போற்றி வீசிடு கன்னம் போற்றி
நிமலனே போற்றி நீலகண்டனுக்கடியேன் போற்றி (8)

சிவனடியார்களான அறுபத்துமூன்று நாயன்மார்கள் வணக்கம்

பருவத்திலன்பு கொண்டு பரசிவபதம் பணிந்து
திருவுளப் பெருமைகண்டு சிவமயமாயறிந்து
கருவுற்ற பிறவிப்பாசக் கட்டறுத்தருமைபெற்ற
அறுபத்துமூவர் பொற்பாதாம்புஜம் பணிகுவேனே.

# மஹாத்மா ஸ்ரீநீலகண்டசிவன் அவர்கள் அருளிய க்ஷேத்ராடன பாடல்களில் ஒன்றான "திருமயிலை"

வெற்பிறவி பயிலாகிப் பூசித் தேத்த
விளங்கி நின்ற மெய்ப்பொருளே விண்ணோரேத்த
வற்புதவான் மாதரன்ன மடவாரேத்த
வன்பராலாம் கைதொழுது பாடியேத்தக்
கற்பகத்தைக் கலந்து நிற்குங் கருணைக்குன்றே
கங்கை மதிச் சடையானே கபாலிநாதா
பொற்பதத்தைப் பணிந்தடியேனுனையடைந்தேன்
புன்னையங்கான் மடமயிலைப் புனித மூர்த்தி

கண்ணாறு பெருக விட்டுத் தொண்டரெலாங்
கைதொழுது மெய்மறந்து மலரிட்டேத்தி
யண்ணாவென்னரசே யென்றரற்றி வாழ்த்தி
யவமின்றித் தவம்புரிந்துன்னருளை மேவிப்
புண்ணாகு நெடும்பிறவிப் பெருநோய் நீங்கிப்
பொன்னடியிற் பொருந்தினர்யான்றிருந்தாவண்ணம்
மண்ணாமிவ்வுலகிடையில் வருந்தி வாடி
வந்துனையே சரணடைந்தேன் மயிலையானே

எங்குற்றாயின்றடியார்கிரக்கமில்லா
வியல்புற்றாயோ யிறைவா யெடுப்பாரின்றி
மங்குற்ற சிறு சேய் போலுன தன்பன்யான்
வருந்துவது மறிந்திலையோ மையிலை தன்னிற்
றங்குற்ற சங்கரனேச்சி புனைந்த
சடையானே வுடையானே சரணீயென்றே
யிங்குற்றே நானெளியேனிரக்கஞ்செய்வா
யெம்பரனேயன்பர் தொழுமிமையோரேறே.

உருவின்றியுயிர்க்குயிராயுலகுக்கெல்லா
முணர்வரிதாயமரர் தொழவுமையினோடும்
பிரிவின்றியருள் வடிவாய்த் தொழும்பர் வேண்டும்
பேறதுவும் நல்கியருள் பேரானந்தம்
சொரிகின்ற மழைமுகலாய்த் தோன்றியாளும்
சோமகலாதரனே தூய் மனத்தர்போற்ற
வருகின்றவான் பொருளே மைலை மேவும்
மாதேவே வந்தருள் மாணிக்கக்குன்றே.

சிறை விரித்தாடும் மயில்போல் மடல் விரித்துச்
சிற்றிடையார்குசங்களெனக் குரும்பைத் தாங்கிக்
குறைமுடித்து நீராட்டக் குடங்களேந்திக்
கொண்டவர் போற்குலை சாய்த்துக் குளிர்கால் வீசித்
தறையிடத்துக் கற்பகமாம் தெங்கின் சோலை
தழைந்து வலம் புரிந்து மதிற்புறஞ் சூழ்மைலைக்
கடைமிடற்றுக் கண்ணுதலே திருக்கபாலக்
கையானே கற்பகமாதொரு மெய்யானே.

சற்பமூரும் முடிமேற்சசியிலங்கச்
சடைக்காட்டுள்ச் கலங்கா வெண்புனல் விளங்க
வற்புதமாயனல் விழியைத் தீண்டி கொன்றை
யலர் விரிந்து தேன்றுளிப்பை வைம்பொன்மேரு
விற்படை தொட்டோரம் பாற்புரம் பொடித்த
வேதியனே விரிகடல் மேற்கரையின் மயிலைச்
சிற்பரையைக் கற்பகத்தை சேர்ந்து மன்னுந்
திருக்க பாலீச்சுரனே திருக்கண்பாரே.

நெடிய திரைக்கர நீட்டி நிலம் படிந்து
நிதமனந்தந் தெண்டனிட்டுக் கடல் முழங்கக்
குடிபெருகிக் குலவு நெடுமாட மோங்கக்
குளிர் மணப்பூம் பொழிறிகள் நான் வீதி சூழ
மடமயிலைப் பதி மருவும் மாதோர் பாகா
வரதா நின்றாள் போற்றி போற்றியென்றே
யுடன் தளர்வுற்றது சுமை பெற்றுனையடைந்தே
னுத்தமனே திருவுளப் பாங்குணர்கிலேனே.

பங்கேருகத் தயனுந் திருமால் தானும்
பார்த்தறியாப் பரஞ் சுடரே பாவியேனுக்
கெங்கே நீயெங்கே நானீது பார்க்கி

னெத்தனையோ தூராதி தூரமாகு
மங்கே வந்திடுதர்க்குன்ன ருளால் அன்றி
யடியேனால் முடிவுறுமோ மயிலை மேவு
மெங்கோனே யடியரெலாமாடிப்பாடி
யின்புற்றார் கண்டுனையே நம்புற்றேனே.

செங்கையினால் மங்கையுமா தேவியன்னாள்
திருவிழி மூன்றும் புகைக்கவிருள் மொய்த்தந்தச்
சங்கையினாலங்கை யெடுத்ததனுறுற்ற
தனிவியர்வை குடைந்துடனே தரணி வீழ்த்த
அங்கது காலாந்தர வாரிதியாய்த் தோன்றி
யஞ்சி அயன்மால் முதலோர பயங் கேட்கக்
கங்கையதாய்ச் சடையுடையுட் கிறங்க வைத்த
கண்ணுதலே திருமயிலைக் கபாலிநாதா.

வாளரவந்தீண்டி யுயிர் போயிறந்து
வன்னிதின்ற கன்னிகை மெய்ப் பொடியுமென்பு
நீளமணிக் கோபுர முன் வருவிதங்கண்
நின்று திருப்பூம்பாவைப் பதிகம் பாடி
மீளவுருப் பெற்றிட வைத்தருமையுற்ற
வேதியர் சம்பந்தர் தமிழ்க் கருளளித்த
காளமருந்திய நீலகண்டா மயிலைக்
கபாலீச்சுரனே யுன் கருணைபாரே.

## கூஷி அந்தாதி

உன்னை நம்புமடியேனி யானுள்ள நொந்தூர்
உழலுவது கண்டுமுமை பாகா நீதா
னின்னமு மொன்றிரக் கமிலாதிருபதேனோ
என் செய்வேனிவ் வுலகிலெளியேனுன்
றன்னை யலாற்றாரகம் வேறெவருங்காணேன்
சங்கரனே சரணீயே சரணமென்றே
புன்னையன் கான்மடமயிலாபுரியில் மேவும்
புண்ணியநேவுனையடைந்தேன் புரிந்து கொள்ளே.

கொள்ளேனோ திருவடியைச் சிரமேல் வைத்துக்
கூறினேனோ நின் பெருமையுணர்ந்து பாடித்
தள்ளேனோயிடர் வினை நோய் துன்பமெல்லாந்
தவிரேனோ வறுமையினைத் தவிர்த்து பூசித்
தள்ளேனோ திருவருளையடி யார்க்கெல்லா
மருத்தேனோ வமுத மார்க் களித்த தேவே
கள்ளேறும் புன்னையங்கான் மயிலை மேவும்
கபாலீச்சரனே நின் கருணை பாரே.

பாரேறிக்கிடந்த கடலொற்றி நின்ற
பதியானே காளத்தி மலையுளானே
காரேறு குழிலியுமை பூசை செய்த
காஞ்சி நகர் உடையானே யிருவர் தேடி

யீரேழு புவனமறிந்தறியாவண்ண
மெழில் சுடராய் நின்ற வண்ணாமலை யுளானே
சீரேறு மலைமாது மயிலாயேத்தத்
திருமயிலாபுரி மேருந் தேவ தேவே.

தேவரெலாந்தொழ வாலங் காட்டுலாடும்
சிவபுரனே திருவலமுஞ் சிறந்த தேவே
பூவையனாற் பூசைபெறும் விரிஞ்சியாகும்
புரமுமர்ந்தருள் பரனே புன்னை கெங்கு
மாவிலகும் பொழிறிகமும் கழுக்குன்றத்தும்
மன்னுமதி சேகரனே மயிலையும் வாழ்
பாவனனே யுனையடைந்தேன் பணிந்து பாடும்
பத்தரெலாந் தொழும் பாதா சற்றிரங்கே.

இரங்காகிலுங் கருணைக் கீது நன்றோ
யென்பரனே எனக்குடையார் வேறு முண்டோ
குரங்காட விட்டெனை நீ கூத்துப் பார்த்த
கொள்கையினிப் போதா தோ குவலயத்திற்
புரங்காத்தவர்க் கருளை புகட்டியாண்ட
புண்ணியனே யுன்னடிக்கே சரண் புகுந்து
வரங்கேட்க வந்தவெனை மயக்கலா மோ
வாட்ட மற வன்பரொடு கூட்டுவாயே.

வாய்விண்டு பசித்தழுது விம்மிவாடி
வந்துமடி பிடித்தகலாச் சேயை யொப்பாய்த்
தாயென்று தொடர்ந்துனையே சரணானேனைத்
தள்ளிவிடின் முறையாமோ சசி புனைந்தோய்
பாய்கின்ற மதயானை பணியக் கற்றூண்
பௌவமிசை மிதந்திடவும் படிந்த அண்ணங்
காய்வின்றி சாந்தமெனப் பெறவும் தொண்டர்
கவலையறத் தாங்கி நின்ற கருணையானே.

ஆனையுரி போர்த்த திருமேனியானே
யனநேந்தியம பத்திலாடுவானே
மானையொரு கரம் வைத்த மழுமையானே
மாதொரு பாகங் கொண்ட மதிபூண்டானே
யுனையுண்ண வைத்தவர்த முள்ளத்தானே
யுயர் விடை மீதேறியுகந் தருளுவானே
நானுனையே சரணடைந்து நம்பினேனே
நலிவகல நற்கருணை நல்காய் நீயே.

நீயலது நினை நம்பு மடியனோர்க்கு
நேசமுறு கதியுளதோ நிகரிலாத
தாயனைய கருணை மிகு தளவ மேனிச்
சங்கரனே யுன் கழற்கே சரணமென்றே
நாயனைய நானெளியேன் நாடிநாடி
நல்லருளைப் பெறுவதற்கு நயந்து பாடி

மாய உலகிடை வருந்தலானேன் கண்டாய்
வந்தொரு காலென்றனக்கோர் வார்த்தை சொல்லே.

சொல்மனதுக் கெட்டாத சோதியானே
தொழு மடியர்க்கருள் வடிவாய்த் தோன்றுவானே
வல்வினை நோய் இடர் வறுமை மாற்றுவானே
மாதுமையோர் பங்கொடும் வந்தருளுவானே
வில்மகனன் மேனியை வெண்ணீரிட்டானே
விண்ணளந்த மால்விடை மீதேறினானே
கன்மனத்த னென்றெனை நீ கைவிடாதே
கரையிறந்த கடலனைய கருணை விண்ணே.

விண்ணகமோ விரித்துரைக்கும் வேதத்துள்ளோ
மெய்யகமோ மெய்மறந்த மோனத்துள்ளோ
கண்ணகமோ கலக்கமற்ற கருத்தினுள்ளோ
கதிரகமோ கலைமதி மண்டலத்தினுள்ளோ
பண்ணகமோ பனிமலர் நன் மணத்தினுள்ளோ
பரத்தகமோ பாடுமன்பர் பாட்டினுள்ளோ
எண்ணரிய பெருமானீறிருக்குந் தன்மை
யெளியே நானறியேன் வந்தியம் புவாயே.

வாயிலிருந்து கதறியும் வந்தருளாளாயின்
மவுனிகள்க்குச் சென்றருளும் வகைதானேதோ
போயிரந்து புகழ் செய்தும் பலி கெடாதார்
புண்ணியனே வாய் பேசார்க்கென் செய்வாரோ
தாயிருந்துந்தன் மகனுக் கமுதூட்டாமற்
றனக் கவசம் பூண்ட கன்றாற்றாங்குவாரா
ராயிதென்ன வுலகிடையிற்றெல்லையான
ஆக்கை சுமைதூக்கி யலைந்திடு வதைய்யா.

ஐயனே வடியனென தல்லறீர
வருள்க் கடல்வாய் கசிந்துருகி யொரு சொட்டேனும்
பெய்யினருள் குறைந்திடுமோ பெருமானே நின்
பெரும் பெருமைக் கேதேனுங் குற்றமுண்டோ
பொய்யுலகம் பொறுக்காதோ புனிதா நின்னாற்
போவென்றாற் போகாதோ துன்பமெல்லாம்
மெய்யனே விண்மதி திகழும் வேணியானே
விதிசரமொன்றறி செய்த விடைக் கோமானே.

மானோர் மைவிழி மலையின் மாதோர் பாகா
மாதேவா மறைமுடி வீற்றிருந்தெலாமும்
தானே தாணாக்கியளித்த தழிக்குஞ் சத்தாய்த்
தன்முதலாயுயிர்க் குயிராய்த் தழைவுற்றேங்கும்
வானேவானின் முடிவே வானோர் போற்றும்
வாழ்சுடரெ மாணிக்க மலையே கைலை
யானே யானந்தமயக் கடலே யன்பர்க்
கரசே கற்பகமேயயற்புதப் பேரின்பே.

பேரின்பப் பேரொளியே பிறரித் துன்பப்
பெருங்கடலைக் கடத்துதர்க்கு நாவாயென்னச்
சீரன்பர்க் கருள்த் துணையே சிவனே முக்கட்
செங்கரும்பே நின் கழற்கே சரணடைந்தேன்
றேரின் போர் முகமெய்திச் சொம் பொற்சைலச்
சிலையேந்திச் சீறரவச்சி சிறு நாண் பூட்டி
யோரம் பெய்தாண் மூன்றும் வெண்ணீறிட்ட
வுத்தமனே முற்று முனககேளானானே.

ஆளவாயிது சமயமையாவுன்ற
ணடியனெனவருள் மாரி காட்டி யென்னுள்
நீள நாள் நின்று விளையாடல் செய்யும்
நின்மலனே. நின்னையறியா தொதுங்கி
வாளினுறை போல் கிடந்தேனெடுத்துத் தாங்கி
மறைத்த விருட் பகை கொய்வாய் வானோர் போற்றுங்
காளமுண்ட திருநீலகண்டா மையிலைகே
கற்பக மாதொரு பாகா கருணைக் குன்றே.

---

*வெளியீட்டாளர் :*
மஹாத்மா ஸ்ரீ நீலகண்ட சிவன் அவர்களது
கொள்ளுப் பேத்தியான

**திருமதி. பி.எல். சரஸ்வதி ராம், B.A.,**
28, போயஸ் தோட்டம்
சென்னை 600 086.
தொலைபேசி : 4992856 / 4992866

*மேலும் விவரங்களுக்கு மேற்கண்ட முகவரியில்
தொடர்பு கொள்ளவும்.*

---

# மஹாத்மா ஸ்ரீ நீலகண்ட சிவன்

## சரித்திரச் சுருக்கம்



**நீலகண்ட சிவன் *(1839-1900)***


*வெளியீட்டாளர் :*

'சங்கீத கலைவாணி', 'தமிழிசைக் குயில்', 'நாதக்கனல்'

திருமதி பி.எல். சரஸ்வதி ராம், பி.ஏ.

(நீலகண்ட சிவன் அவர்களது கொள்ளுப் பேத்தி)

61 (28) போயஸ் தோட்டம், சென்னை - 600 086

தொலைபேசி : 2499 2856 / 2499 2866 / 2497 1313 / 2497 1314

Fax : 2497 1312

# ஸ்ரீ நீலகண்ட சிவன்

**(சரித்திரச் சுருக்கம்)**

ஏராளமான எளிய தமிழ்ப் பாடல்களை, மிக அற்புதமான பண்களில் இயற்றி, தியாகய்யர், முத்துசாமி தீட்சிதர் ஆகியோரைப் போல் புகழ்பெற்று வாழ்ந்து, பக்தி இயக்கத்திற்கும் தமிழிசைக்கும் அரும்பணியாற்றி தமிழிசைக்கு பெருமை சேர்த்தவர் ஸ்ரீ நீலகண்ட சிவன் என வழங்கப்படும் ஸ்ரீ நீலகண்ட தாசர் ஆவர்.

ஸ்ரீ நீலகண்ட சிவன் அவர்கள் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள வடிவீச்வரம் என்ற அழகிய தலத்தில் 1839-ம் ஆண்டு பிராமண குலத்தில் அவதரித்தார். இவரது பெற்றோர்கள் பல ஆண்டுகளாக மகப்பேறு இல்லாத காரணத்தால், குழந்தை வேண்டி ஸ்ரீ நீலகண்டேச்வரரையும், ஆனந்தவல்லி அம்மையாரையும் வேண்டியதன் பலனாக ஸ்ரீ நீலகண்ட சிவன் அவர்கள் உதித்தார். இவரது தந்தை நீலகண்டர் ஆனந்தவல்லி அம்மையுடன் உறையும் சிவன் ஆலயத்தில் தர்மகர்த்தராக பணியாற்றி வந்தார்.

தவமிருந்து பெற்ற ஆண் மகவுக்கு "சுப்ரமணியம்" எனப்பெயர் சூட்டி சீராட்டி, பாராட்டி சிவபக்தியெனும் அமுதபானமும் சேர்த்து ஊட்டி வளர்த்தனர்.

பிள்ளைப் பருவத்தில் சுப்ரமணியம் பக்திப் பரவசத்துடன் தேவாரம், திருவாசகம், திருவருட்பா, முத்துத்தாண்டவர், ராமநாடகப் பதங்கள் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்தார். நாள்தோறும் பஜனைகள் செய்து கோயிலைச் சுற்றி வருவார். ஆசார அனுஷ்டானங்களை முறையாகச் செய்து வந்தார். படிப்பில் பிடிப்பற்றவராக இருந்தாலும் பரமனின் பாத பூஜைகளை குறையின்றிச் செய்து வந்தார்.

பதினான்கு வயது நிரம்பிய சுப்ரமணியத்திற்கு அன்னாரது தந்தையார் திருமணம் செய்து வைக்க ஆசை கொண்டார். தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்னும் முதுமொழிக்கொப்ப, செல்வந்தரான தாணு ஐயர் என்பாரின் மகளான லக்ஷ்மியை மணந்து கொண்டார்.

சுப்ரமணியம் திருமணம் செய்து கொண்டதால், அன்னாரது சிவபக்தி சிறிதளவும் பாதிக்கப்படவில்லை. ஆயினும் தாமரை இலை தண்ணீர் போல தன் வாழ்க்கையை நடத்தி வந்தார். அடிக்கடி வீட்டை விட்டு வெளியேறி தியானத்தில் அமர்ந்து விடுவார்.

'இல்லறத்திலிருந்து அல்லல்படுகிறேனே. இதற்கு ஓர் வழி அறியாமல் தவிக்கிறேனே' என சிவனை நினைத்து பலமுறை உருகி வேண்டினார். ஒருநாள் ஒரு அசரீரி கேட்டது. "சிவபக்தி செய்ய இல்லறம் ஓர் இடையூறு அல்ல. இல்லறத்திலிருந்து கொண்டே என்னை நீ பக்தியால் வழிபடலாம்" என்றது. இதனைக் கேட்டதும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்த சுப்ரமணியம் வீட்டிற்குத் திரும்பி தொடர்ந்து தீவிரமாக சிவபக்தியில் ஈடுபட்டார்.

தனது 18வது வயதில் திடீரென ஒருநாள் வீட்டை விட்டு வெளியே சென்றவர் மூன்று நாட்களாகியும் திரும்பவில்லை. எங்கு தேடியும் அவரைக் காணவில்லை.



நீலகண்டேஸ்வரர் கோயிலின் வாகனப் பிரை (அறை)யில் யாருக்கும் தெரியாமல், அன்ன ஆகாரமின்றி கடும் தியானத்தில் ஆழ்ந்திருப்பது தெரிய வந்தது. ஆனந்தவல்லித் தாயாரை நினைத்து மனமுருகி சுப்ரமணியம் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்.

தனது மகன் உணவு இன்றி இருப்பதை எந்தத் தாய் தான் பார்த்து கொண்டு வாளாவிருப்பாள்? வாகனப்பிரைக்கு வந்து விட்டாள். பக்தனைத் தேடி அன்னை ஆனந்தவல்லி நீல்கண்டேசுவருடன் வயிறார உண்ணப் பாலும் பழமும் அளித்தாள். பின் மறைந்தாள். சுப்ரமணியம் புது உற்சாகம் பெருக்கெடுக்க, பக்திப் பரவசத்துடன் வெளிவந்து ஆனந்தவல்லி அன்னையின் சந்நிதியின் முன் நின்று, "பண்டென்ன பூசை யான் செய்த பயனோ வலது பரம நின் கருணை இயல்போ" எனத் துவங்கி பத்துப் பதிகங்கள், "திருநீலகண்ட தசகம்" பாடினார்.

சுப்ரமணியம் படித்ததோ மலையாள மொழி. வேறு எந்த மொழியும் அறியாத அவர் பாடியதோ தமிழ்ப்பாடல்கள். இதனைக் கண்ணுற்ற அனைவரும் அதிசயித்துப் பாராட்டினார்கள்.

அமீர் கல்யாணி ராகத்திலமைந்த 'சிவனை நினை மனமே' என்ற பாடல் தான் சுப்ரமணியம் பாடிய முதல் தமிழ்க்கீர்த்தனை. இதனைத் தொடர்ந்து மேலும் பல கீர்த்தனைகளைப் பாட ஆரம்பித்தார்.

இதன் பின்னர் இவரது புகழ் எங்கும் பரவியது. இவரது மாமனார் இவருக்கு மாஜிஸ்டிரேட் பதவியைப் பெற்றுத் தந்தார். 15 ஆண்டுகாலம் பணியாற்றினார். பணியின் போது பல சோதனைகளைச் சந்தித்தார். பொய் சாட்சிகளையும், லஞ்ச ஊழல்களையும் கண்டு மனம் பொறுக்க மாட்டாமல் தன் பதவியை ராஜினாமா செய்தார். இதன் எதிரொலியாகத் தான் "எண்ண விதம் பிழைப்போம் எளியோரே, நாம் எப்படித் தேறுவோம் சொல்வீரே! அன்னையும் தந்தையுமவர் பெற்றவரு மதித்து அன்யோன்யம் சேராத அன்யாய காலமிதில்" என்று பாடினார். முகாரி ராகத்திலமைந்த இப்பாடலின் 12 சரணங்களில், தனது மனத்திலிருந்த குறைகளையும், சமுதாய சீர்கேடுகள் மற்றும் குறைபாடுகளையும் சுட்டிக் காட்டிச் சாடியிருக்கிறார்.

பின்னர் சுப்ரமணியம் தனது வாழ்நாள் முழுதும் சங்கீத உபன்யாசங்கள் செய்வதிலும் நல்லுபதேசங்கள் செய்வதிலும் ஈடுபட்டார். சீடர்கள் புடைசூழ பஜனைகள் செய்வதிலும் தியானம் செய்வதிலும் ஈடுபட்டு வந்தார்.

திருவாங்கூர் மகாராஜா, புதுக்கோட்டை மன்னர், இராமநாதபுரம் ராஜா, கொச்சி மன்னர் மற்றும் பலப்பல பிரபுக்கள் இவரை தரிசித்து, ஆசி பெற்று, நல்ல பல கைங்கர்யங்கள் செய்ய உதவினார்கள்.

"நிதி சால சுகமா, ராமுனி சந்நிதி சேவா சுகமா" என்று ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் பாடியதைப் போலவே இவரும் அரசர்களை மதிக்கவில்லை.

'அரசனிடத்தில் நமக்கென்ன? அவரால் ஆவதும் என்னே? ஈசனிடத்தில் அன்பு வைத்து சித்தத்தை சிவன்பால் சேர்த்திடுவோம்' என்ற கருத்துடன் பற்பல கீர்த்தனைகளைப் பாடினார்.

அவர் இயற்றிய பஜனைக் கீர்த்தனைகள் மிகப் பிரபலமாகி புகழ்பெற்றன. அதில், "என்றைக்குச் சிவக்ருபை வருமோ" என்னும் முகாரி ராகப்பாடல் முழங்காத தமிழ் இல்லங்களோ அந்த காலத்தில் இருந்ததில்லை.

அவ்வண்ணமே, "ஒருநாள் ஒரு பொழுதாகிலும் சிவனை உச்சரிக்க வேணும் இச்சென்மம் கடைத்தேற" எனும் கமாஸ் ராகப் பாடலும் மிகப் பிரசித்தி பெற்றது.

"ஆனந்த நடமாடுவார் தில்லையம்பலந்தனில்
அடிபணிபவர்க்கு அபஜெயமில்லை"

"சம்போ மஹாதேவ"

"சிவனை நினை மனமே"

"சிவனை நினைத்து ஸ்துதி, சிவநாமம் வெகுக்ஷேமம்" ஆகிய கீர்த்தனைகளை பல வித்வான்கள் தங்களது இசை நிகழ்ச்சிகளில் திரும்பத் திரும்ப பாடினார்கள்.

கீர்த்தனைகள் மட்டுமின்றி சிந்து, விருத்தம், கண்ணிகள், பதிகங்கள், பண்கள், லாலிகள், ஊஞ்சல் பாட்டுக்கள், அன்னக்கண்ணி, பாம்புக் கண்ணி, குறத்திக் கண்ணி, குயில் கண்ணி, தோழிக் கண்ணி, நலுங்குப் பாடல், ஊஞ்சல், கும்மி, தாலாட்டு, மற்றும் அஷ்டகம், ஷட்கம், பஞ்சகம், அந்தாதி என பல பண்களின் பெயர்களை வைத்து பாடியிருக்கிறார். 45 வகை தமிழ்ப்பாடல் வகைகள் பாடியுள்ளார்.

சைவ சித்தாந்தத்தை நிலைநிறுத்தி வைத்து சேவை புரிந்த அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், திருஞான சம்பந்தர் ஆகியோரைப் போன்று, பத்தொன்பதாம் நூற்றாண்டில் சைவ சித்தாந்த, சமரச சன்மார்க்க நெறிகளை உலகம் முழுவதும் பரப்ப வந்தவர் "சுப்ரமணியம்". இவரை மக்கள் அன்புடன் "ஸ்ரீ நீலகண்ட சிவன்" என்றும் "நீலகண்ட தாசர்" என்றும் அழைத்து மகிழ்ந்தனர்.

ஸ்ரீ நீலகண்ட சிவன், 2000க்கும் மேற்பட்ட பதிகங்கள், பண்கள் அடங்கிய "திருநீலகண்ட போதம்" என்ற பெரிய நூலையும், "கண்ணப்ப நாயனார் சரித்திரம்" முதலிய நூல்களையும் எழுதி இருக்கிறார்.

அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், திருஞான சம்பந்தர், கண்ணப்பர், நீலகண்டர், குங்கலிய கலியர், சிறுத்தொண்டர், விறமுண்டர், அமர்நிதி, கலிகாமர், இயற்பகை ஆகியோர் சரித்திரங்களும், சோமபார மகாத்மியம், சிவராத்திரி மகாத்மியம், ஸ்ரீ ருத்ர சரித்திரம், பிரதோஷ மகாத்மியம், பிக்ஷாடனர் சரித்திரம், சண்டேஸ்வரர் சரித்திரம், சித்தர் சரித்திரம், கீர்த்தி மாலினி, உமாபதி சிவாச்சாரியார் சரித்திரம், கௌரி சரித்திரம், மண் சுமந்த லீலை, மாதுலனாய் வந்து வழக்குரைத்த லீலை, விறகு விற்ற லீலை, ஹாலாஸ்ய லீலை, பார்வதி கல்யாணம், ஸம்பவ காண்டம் போன்ற நூல்களும் கையெழுத்துப் பிரதிகளாகவே என்னிடமுள்ளன.

என்னதான் சிவபக்தியில் சிறந்தவராயிருந்தபோதும் ஸ்ரீ நீலகண்டதாசர் ஓர் முருகனடிமையாவார். அவருடைய குலதெய்வம் தமிழ்க்கடவுளாகிய முருகப்பெருமான் தான் என்பது கீழ்க்கண்ட பாடலிலிருந்து தெரிய வருகிறது.

"உன்னைக் குலதெய்வமென்று உறுதிகொண்டு ஸதா
நினைக்குமெனதுள்ளம் நீ யறியாததா?
எனக்குன்றிருமனதிரக்கம் செய்தருள்வாய்
ஷண்முகா, குகா, முருகாயேழை மறந்திடு வேனோக்ருபை தருவாய்".

ஸ்ரீ நீலகண்ட தாஸர் தேவி மீது பல கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி, கௌரி, உமா மகேஸ்வரி, சரஸ்வதி, லட்சுமி, பார்வதி, லலிதாதேவி, ஆனந்தவல்லி, ஆவுடை அம்மன், காந்திமதி அம்பாள் இப்படி பலப்பல கீர்த்தனைகள்.



ஸ்ரீ தியாகராஜர் பஞ்ச ரத்ன கீர்த்தனைகளைப் போல நீலகண்ட தாஸர் பஞ்ச நடனக் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். தில்லை, மதுரை, திருநெல்வேலி, திருவாலங்காடு, திருச்சிற்றம்பலம், திருக்குற்றாலம் ஆகிய இடங்களுக்கான பாடல்கள் இயற்றியுள்ளார்.

ஸ்ரீ நீலகண்ட தாஸர் பல சித்திகளைச் செய்து பக்தர்களை ஆச்சரிய வெள்ளத்தில் மூழ்கடிக்கச் செய்ததாகச் செய்திகள் உண்டு.

ஒருசமயம் பத்மனாபபுரம் கோயிலில், சுவாமி புறப்பாட்டின் போது, எண்ணெய் இல்லாமல் தீவட்டிகள் மங்கத் துவங்கின. இது கண்ட தாஸர் உடனே, அருகில் இருந்த குளத்திலிருந்து நீரை அள்ளி அள்ளி தீவட்டிகளின் மேல் பொழிந்தார். அந்த நீர் எண்ணெயாக மாறியது. தீவட்டிகள் ஒளியை உமிழ்ந்தன. இவ்வதிசயம் கண்டு எல்லாரும் வியந்தனர்.

பிறிதொரு சமயம் கருங்குளம் என்ற கிராமத்தில் மழை இன்மையால் பூமி வெடித்து, அதனால் மக்கள் மனமொடிந்து வாழ்வதை அறிந்து ஸ்ரீ தாஸர் அங்கு சென்று மார்த்தாண்டேஸ்வரரை நினைத்து பயிர் வளர மழை பொழிய வேண்டினார். உடனே மழை கொட்டியது. பஞ்சமும் பறந்தது. "பிழைகளெல்லாம் நீ பொறுப்பாய் பெற்றவளே, பிள்ளைகள் குன்கழலிணையன்றி கதி காணேன் கண்டறிவாய், மழையென வந்தருள் தருவாய், மாதேவன் மாதேவி அழகுனக் கீதாகுமன்றோ அன்னை குல சேகரியே - மார்த்தாண்டேசுவரர் மேவும் அன்னை குலசேகரியே"

ஸ்ரீ நீலகண்ட தாஸர் பஞ்சாட்சரத்தை ஜெபித்து, விபூதியை இறந்து போன ஓர் பாலகனுடைய உடல் மீது பூசி, இறந்த பாலகனுக்கு உயிரூட்டி, தாயின் சோகத்தைப் போக்கினார். மழை வரவழைத்ததைப் போலவே, பெரு மழையைத் தடுத்தும் நிறுத்தியிருக்கிறார்.

தாஸரைப் பணிந்தோர்க்குப் பொருளும், பதவிகளும் கிடைத்தன. அவரை கேலி செய்தவர்களுக்கு ரோகம், பாபம் வந்து அல்லல் பட்டனர்.

அவர் பல வியாதிகளை விபூதியின் மகிமையினால் மாற்றி பூரண குணமடையச் செய்திருக்கிறார்.

ஒருநாள் தாஸர் தனது பக்தர்களுடன் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துறங்கும்போது, வீட்டுக்காரன் எழுப்பி, விரட்டி ஓட்டினான். கொதித்தெழுந்த பக்தகோடிகள் வீட்டுக்காரனை திட்டத் தொடங்கினர். அப்போது தாஸர், "அவனை யாரும் அவமதித்துத் திட்டாதீர்கள். தான் என்ன செய்கிறோம் என்பதை அறியாமலேயே செய்கிறான். நாளை அவுன் நமனுலகை அடையப் போகிறான். இன்று ஒரு திண்ணையைக் கூட பிறர்க்கு உதவியாக கொடுக்க எண்ணியதில்லை. என்னே அவனது பெருந்தன்மை" என்று கூறினார்.

அடுத்த நாள் ஆற்றில் குளிக்கும்போது, ஈவிரக்கம் அற்ற அந்த வீட்டுக்காரன் வழுக்கி ஆற்றில் விழுந்து மூச்சுத் திணறி மாண்டு போனான்.

ஸ்ரீ நீலகண்ட தாஸர் சிவபக்தராக இருப்பினும் அவர் வைஷ்ணவ மதத்தை வெறுக்கவில்லை. சில வைஷ்ணவர்கள் அவரை அணுகி "சிவன் பெரியவரா? விஷ்ணு பெரியவரா?" என்று கேட்டனர்.

தாஸர் கேதார கௌளை ராகத்தில் -

"ஸ்ரீ கண்டேச்வரனை, ஸ்ரீ பத்மனாபனை தரிசனம் செய்வோமே
கண்டு பார்க்கில் இரண்டு பேர்க்கும் நன்றே.
வன்மை கண் மூன்றுடைய நீலகண்ட தாஸன் சொல் உண்மை"

என்று முடித்து, பெரிய சரணங்களை உள்ளடக்கிய கீர்த்தனையைப் பாடினார்.

"கோபாலகிருஷ்ண தயாநிதே", "வந்தருள் சமயமிதே", "தெய்வம் நீயே நல்ல தெய்வம்" என்று பல கீர்த்தனைகளை இயற்றி, பத்மனாபர் பேரில் பாடினார்.

"திருவனந்தை ஸ்ரீ பத்மனாப பஞ்சகம்", "த்ருவம்பாடி கிருஷ்ண அஷ்டகம்", "ஸ்ரீ ராமச் சந்திரா அஷ்டகம்" என்று பல அரிய பக்தி நிறைந்த சங்கீத பொக்கிஷங்களை அவர் நமக்குத் தந்து சென்றிருக்கிறார்.

ஸ்ரீ தாஸர் சங்கீதத்திலுள்ள நுணுக்கங்களை நன்கு அறிந்திருந்தார். கதா காலட்சேபம் (சங்கீத உபன்யாசம்) செய்வதில் அபார ஆற்றல் படைத்திருந்தார்.

பாட்டுக்கள், விருத்தங்கள் இவற்றைப் பேச்சுடன் கலந்து பல கதைகளை எல்லாருக்கும் புரியும் வகையில் உபன்யாசம் செய்து, பல கதைகளை எல்லாருக்கும் புரியும் வண்ணம் உபன்யாசம் செய்து, அரிய பெரிய விஷயங்களை எல்லாருக்கும் எளிதில் புரியும் வண்ணம் செய்தார்.

ஸ்ரீ தாஸரின் நான்கு குமாரர்களும் தந்தையுடன் கூட பாடி உதவிவந்தனர்.

சிவ பஜனை செய்தல், உபன்யாசம் செய்தல், சிவ மடங்களை நிறுவுதல் முதலிய நல்ல காரியங்களைச் செய்து வந்தார்.

தனது சீடர்களுடன் 108 க்ஷேத்திரங்கள் சென்று அங்குள்ள ஆலயங்களில் உறைந்துள்ள தெய்வங்களை தரிசனம் செய்து ஆயிரக்கணக்கான பாடல்களை இயற்றியிருக்கிறார்.

தமிழ்நாட்டிலும் கேரளாவிலும் பல கோயில்களை தரிசித்து முடித்ததும், தூத்துக்குடியில் கப்பல் மூலமாக இலங்கையிலுள்ள கதிர்காமம் சென்று கதிர்வேலனை தரிசிக்க எண்ணினார். தன் பக்தன் கப்பல் ஏறிவந்து சிரமம் கொள்ள வேண்டாமென எண்ணிய இறைவன் கதிர்வேலன், தானே நேரில் வந்து தரிசனம் அருளினார்.

கதிர்வேலனின் தரிசனம் பெற்றதும், ஸ்ரீ நீலகண்ட தாஸர் ஆனந்தக் கூத்தாடி, முகாரி ராகத்தில், "கண்ணாறக் கண்டேனே கதிர்வேலனைக் கண்ணாறக் கண்டேனே. இரு கண்ணாறு பெறுக. செங்க கண்ணன் மருகனை முக்கண்ணன் திருமகனை கண்ணாறக் கண்டேன்" என்று பாடினார்.

எல்லா ஊர்களிலும் எழுந்தருளியிருக்கும் கடவுளரையும் தரிசித்துப் பாடிய தாஸர், திருவைக்கத்திற்கு அருகில் இருக்கும் ஏற்றுமானூருக்கு மட்டும் போகவில்லை. ஆனால் ஏற்றுமானூர் இறைவனோ தாஸரை விடுவதாக இல்லை. ஒரு குட்டி யானை இவரைத் துரத்தி துரத்தி, இவர் யானையிடமிருந்து விடுபட்டு ஏற்றுமானூர் கோயிலுக்குள் போனவுடன் குட்டி யானை மறைந்தது. அப்போது இவர் "ஒட்டிலாதுன்ன விட்டடியேன் போமாறுன்னினே னென்பதெண்ணி, யெனையொரு குட்டியானையை விட்டுணர் வீந்திட்ட கோலங்கண்டு வந்துன்னடி கும்பிட்டேன்" எனத் துவங்கி, பத்துப் பதிகங்களைப் பாடினார்.



சென்னை மயிலை வந்து ஸ்ரீ கபாலீச்வரன் கற்பகாம்பாள் இருவரையும் தரிசித்து பின்வரும் பதிகங்கள் பாடினார்.

"வெற்பிறவி மயிலாகிப் பூசித்தேத்த
விளங்கி நின்ற மெய்ப் பொருளே விண்ணோரெத்த
அற்புதவான் மாதரன்ன மடவாரெத்த
அன்பரெல்லாம் கை தொழுது பாடி யேத்த
கற்பகத்தைக் கலந்து நிற்கும் கருணைக் குன்றே
கங்கைமதிச்சடையானே கபாலிநாதா
பொற்பாதத்தைப் பணிந்தடியேனுனை யடைந்தேன்
புன்னையங்கான் மடமயிலைப் புனித மூர்த்தி".

ஸ்ரீ நீலகண்ட தாஸர் தென்னிந்தியாவில் சென்று வழிபடாத கோயில்களே இல்லை; பாடிச் சிறப்பிக்காத தெய்வக் கோயில்களே இல்லை என்று கூறலாம்.

ஸ்ரீ தாஸர் கையாண்ட ராகங்கள், முக்கியமாக காம்போதி, கமாஸ், முகாரி, வராளி, நாட்டை, ஆரபி, கல்யாணி, ஆனந்த பைரவி, சுருட்டி, பைரவி, நாத நாமக்ரியை, இன்னும் அபூர்வ ராகங்களாகிய மங்கள கைசிகி துஜாவந்தி, மாஞ்சி, கோபிகா வஸந்தம், சைந்தவி குறிஞ்சி, அமீர் கல்யாணி, யமுனா கல்யாணி, நாயகி இன்னும் பல ராகங்களில் கீர்த்தனைகள் இயற்றியுள்ளார்.

மனோன்மணி கும்மி, லலிதாம்பாள் கும்மி, காளகஸ்தீசர் கும்மி, இன்னும் மங்களம் சிவன் பேரில், ராஜ ராஜேஸ்வரி, ஆதிபராசக்தி பேரில், முருகன் பேரில், கணேசர் பேரில், தோடைய மங்களம், மால் முருகன் மீது தோடைய மங்களம், "மஹா தேவருக்கு மங்களச் சிந்து" பாடியிருக்கிறார்.

உலக மக்களுக்கு எதெல்லாம் ஆகும், எதெல்லாம் ஆகாது என்பதனை முறையே கல்யாணி ராகத்திலும், முகாரி ராகத்திலும் பாடியிருக்கிறார்.

(i) ஆகும் ஆகும் எவர்க்கும் இது ஆகுமாகுமே
தாகமுடனே ஏகமனதாய் ஸதாசிவ பக்தி
அது செய்தால் முக்தி ஆகுமாகுமே.

(ii) ஆகாதாகாதே இதெல்லா மாகாதாகாதே.

1. ஏறாத மேட்டுக் கிறைக்கின்ற தண்ணீர் போல்
சேராத மூடருக்குச் சிவஞானம் போதித்திடல் (ஆகாதாகாதே)
2. சானாகிடங்குக்குச் சவ்வாது பூசினாப் போல்
வீணாகக்க சடர்க்கு வேதாந்த முரைத்திடல் (ஆகாதாகாதே)
3. கள்ளபின் கஞ்சாவுண்டு கனமதி கெட்டோர் போல
கள்ளவாசனைக் கொண்டு காலம் வீணாகச் செய்யல் (ஆகாதாகாதே)
4. ஆலமதையு முண்டு அடியாரை யாண்டருளும்
நீலகண்டத் தோன் பாதம் நித்திரையிலும் மறைக்கல் (ஆகாதாகாதே)

தாஸர் அவர்கள், "நீலகண்ட" என்ற முத்திரையிட்டு பாடல்களை முடித்தாலும், நீலகந்தரன், நீலமணிகண்டன், நீலமணி சுந்தரன், நீலமைமணிகண்டன், நீலனாம மணி சுந்தரன் என்னும் பல முத்திரையுள்ள பாடல்களையும் இயற்றியுள்ளார்.

அவர் பாடிய பாடல்களில் சம்ஸ்க்ருதமும் தமிழும் கலந்த பாடல்கள் பல உள்ளன.

மிருதங்கச் சொற்கட்டுகள் வைத்துப் பாடப்பட்ட கீர்த்தனைகள் பல உண்டு. ஸ்வாரக்ஷரம் கோபுச் சயதி ஸ்ரோத்ரோவாஹயதி அமைத்துப் பாடிய பாடல்களும் உண்டு. நிந்தா ஸ்துதி வைத்துப் பாடிய பாடல்களும் உண்டு.

பிரபல தமிழ் சாகித்ய கர்த்தாவான ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள் தனது 9வது வயதில், திருவனந்தபுரத்தில், ஓராண்டுகாலம் ஸ்ரீ நீலகண்டதாஸரின் இல்லத்தில் தங்கியிருந்து பஜனைகளில் கலந்து கொண்டார். அவருடைய சீடர்களில் ஒருவராக இருந்தார்.

ஸ்ரீ நீலகண்ட தாஸரின் அந்திம காலம் ஒரு தனிச் சிறப்புடன் திகழ்ந்தது. தமது தீர்த்த யாத்திரைகளையெல்லாம் முடித்துக் கொண்டு சஷ்டியப்த பூர்த்திக்கு தனது சொந்த ஊராகிய திருவனந்தபுரம் வந்தார். அங்கு அவர் ஓராண்டு காலம் தங்கினார்.

தனது 61வது வயதில் சஷ்டியப்த பூர்த்தியும் சிறப்பாக நடைபெற்றது. 1900-ம் ஆண்டு ஆஷாட மாதத்தில் ஒருநாள் தனது ஒரே மகளையும் நான்கு புதல்வர்களையும் தன்னருகில் அழைத்து, இன்னும் மூன்றே தினங்களில் இவ்வுலகை விட்டு சிவலோகம் செல்லவிருப்பதாகக் கூறினார்.

தேகத்தில் ஒரு வியாதியுமில்லாமல் பூரண ஆரோக்கிய நிலையிலிருக்கும் போது தாஸர் இவ்வாறு கூறியதை யாரும் நம்பவில்லை.

ஆனால், சில சீடர்களும் இதனை தெய்வவாக்காக எண்ணி, எல்லா இடங்களுக்கும் இத்தகவலைச் சொல்லியனுப்பினார்கள்.

இதனைச் செவியுற்ற ஆயிரக்கணக்கான மக்கள், தாஸரது கடைசி தரிசனம் கிடைக்கவும், விபூதி பிரசாதம் வாங்கவும் திரளாகக் கூடியிருந்தார்கள்.

ஸ்ரீ தாஸர் அந்த நாளன்று அனைவருக்கும் விபூதி பிரசாதம் கொடுத்து ஸ்ரீ மஹாதேவராகிய ஸ்ரீ நீலகண்டரது தரிசனம் குறித்து எட்டுப் பதிகங்கள் பாடினார்.

ஸ்ரீ நீலகண்ட தாஸர் குறிப்பிட்ட அந்த திங்கட்கிழமையும் வந்தது. மக்கள் புஷ்ப விமானம் கட்டினார்கள்.

மாலை மணி 4.30க்கு பிரதோஷ வேளையில் துவாதசி திதியும், கிருஷ்ண பக்ஷமும் கூடிய ஆஷாட (ஆடி) மாதத்தில் ஸ்ரீ தாஸர் தனது இரண்டு கரங்களையும் கூப்பி சென்னி மேல் வைத்தார். "மஹாதேவா, நீலகண்டா" என்று மூன்று முறை உச்சரித்தார். உட்கார்ந்த நிலையிலேயே, கபால மோட்சம் அடைந்தார்.

தாஸர் தனது மறைவிற்காக யாரும் அழக்கூடாது என்று ஆணை பிறப்பித்திருந்தார். யாருமே அழாமல், பஜனை செய்து கொண்டே, புஷ்ப விமானத்தில் உட்கார்ந்த நிலையில் அவரை அமர்த்தினார்கள். நாதஸ்வரம், பஞ்ச வாத்தியங்கள் முழங்கின. பஜனை கோஷ்டி பின்தொடர்ந்து வர, தாஸரின் இறுதி ஊர்வலம் நடைபெற்றது.

ஸ்ரீ நீலகண்ட தாஸர் மறைந்து 102 ஆண்டுகள் ஆகின்றன. அவர் நமக்களித்துச் சென்றுள்ள இசைப் பொக்கிஷம் என்றுமே அழியாத செல்வங்கள் ஆகும்.

தமிழும் தமிழிசையும் உள்ளளவும் ஸ்ரீ நீலகண்ட தாஸரின் புகழ் மறையாது.

அன்னாரது படைப்புக்களை பாடிப் பரப்புவதே நாம் அவருக்குச் செய்யும் நன்றிக் கடனாகும்.

எழுதியவர் - **பி.எல். சரஸ்வதி ராம்**